REGD. No. TN 48 (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 ❋ 4 பக்கம் விலை 30 காசு



**இந்தி**

இந்தி அரை குறை மொழி. இதுமொழிப் பிரச்சனை அல்ல. அரசியல் ஆதிக்கப் பிரச்சினை.

-தந்தை பெரியார்

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**நன்னெறி**

தாங்கிக் கொள்வது, தளராமல்இருப்பது காலம் தவிர்ப்பது கண்ணியம் காப்பது இது தான் என் நெறி நன்னெறி.

-பேரறிஞர் அண்ணா

மலர்: 3 (●) சென்னை 16—1—1979 செவ்வாய் (★)❋●❋(★) (★)❋●❋(★) (★)❋●❋(★) வெளியீடு 17—1—1979 புதன் (●) இதழ்: 90

ஃ அரசியல் - சாதி-மதவேறுபாடு கடந்துநிற்க வேண்டியது மொழிப்பிரச்சினை ஃ விரைவில் அனைத்துக்கட்சி தலைவர்களுடன் ஆலோசனை

# நமது முடிவை டெல்லி ஏற்கமறுத்தால் அனைவரும்

# தமிழைகாக்க ஒன்றுபடுவோம்

## வள்ளுவர் விழாவில் புரட்சித்தலைவர் முழக்கம்

**சென்னை ஜன. 16-மொழிப்பிரச்சினையில் அரசியல் ஜாதி, மதம் இவைகளை கடந்து அரசும் மக்களும் ஒன்று சேர்ந்து போராடவேண்டும் இதுபற்றி அனைத்துக் கட்சி தலைவர்களுடன் விரைவில் பேசி அதில் எடுக்கப்படும் முடிவை மத்திய அரசு ஏற்கமறுத்தால் தமிழைக் காப்பதற்காக அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரே குரலாக ஒலித்தாக வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம் என்று முதலவர் புரட்சித்தலைவர் முழங்கிவிட்டார்.**

வள்ளுவர் கோட்டத்தில் நேற்று இரவு நடந்த திருவள்ளுவர் விழாவில் சிறப்புரையாற்றிய முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:

"இந்த விழா வள்ளுவர் புகழை உலகுக்கு எடுத்துக் காட்டும் விழாவாக மக்களால் கருதப்பட்டு பெரியோர்கள் தங்கள் ஆற்றலை வெளிப்படுத்தும் வகையில் சிறப்பாக அமைந்ததோடு அனைவரும் நமது கடமையை நிறைவேற்றி இருக்கிறோம். என்னைப் பொறுத்த வரை இங்கே குறிப்பிட்டு ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன்.

### உரிமையைக் காப்போம்

இது தமிழைப் பாதுகாக்கும் விழாவா வளர்க்கும் விழாவா என்று என்னைக் கேட்டால் தமிழைப் பாதுகாக்கும் நடவடிக்கைக்கு முதல்கட்ட விழா என்று தான் கூறுவேன். அதற்குக் காரணம் என்னவென்றால் தமிழை வளர்க்க தமிழ்ப் பேரறிஞர்கள் பலர் இருக்கிறார்கள். இங்கே போற்றிப் பாராட்டி மரியாதை செய்தோமே அவர்களை மட்டுமல்ல இன்னும் ஆற்றல்மிக்கவர்கள் தமிழைமறுமலர்ச்சி அடையச் செய்தவர்கள் ஏராளம் இருக்கிறார்கள். என்றாலும் அவர்களுக்கெல்லாம் இருக்குள்ள நிலைமையை எடுத்துச் சொல்ல இது காலக்கோள் விழாவாக உருவாக்கப்பட்டிருக்கிறது

நான் நிதானத்தோடும் எண்ணிப் பார்த்தும் எச்சரிக்கையோடு பேசுகிறேன். நாட்டில் உள்ள நிலைமைகளை எண்ணிப் பார்க்கிறேன். ஒவ்வொரு மாநிலமும் அந்தந்த மாநில மொழிகளைக் காப்பாற்றுவதிலும் பரப்புவதிலும் எந்த அளவுக்கு உரிமை படைத்ததோ அந்த அளவுக்கு தமிழகம் தமிழைப் பரப்பவும் காக்கவும் உரிமை படைத்திருக்கிறது என்பது மட்டுமல்ல தமிழ் அந்தத் தகுதியை முழுமையாகப் பெற்றிருக்கிறது என்று சொல்லும்போது தமிழ் நமது உயிரைப் போன்றது உயிரைக் காட்டிலும் மேலானது என்பதை எடுத்துக்காட்டியும் அதற்கு வழிவகுத்தும் இந்த விழா அமைந்திருக்கிறது.

### எச்சரிக்கை அவசியம்

இங்கே தமிழறிஞர்கள் நம்மால் பாராட்டப் பெற்றார்கள், என்பதை விட அவர்கள் நம்மால் வழிபடத் தகுந்தவர்கள் என்றாலும் அவர்களை எத்தனை கோடி பேருக்குத் தெரியும் என்று சிந்தித்துப் பார்க்க கடமைப்பட்டிருக்கிறோம்.

அந்த வகையில் இது எச்சரிக்கை தரும், விழாவாக அமைகிறது. நாம் ஏமாந்து விட்டால், கொஞ்சம் சோர்ந்துவிட்டால் தமிழுக்கு ஆபத்து வந்துவிடுகிற சூழ்நிலை வந்து விடும். இதை தயவு செய்து மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இங்கே பாராட்டுப் பெற்ற அத்தனை பேரும் பாராட்டைப் பெற தகுதி வாய்ந்தவர்களாக இருந்தும் யாருக்கு பாராட்டு வழங்குவது என்று தேர்வு செய்யும் நேரத்தில் எங்களுக்குமிகப் பெரிய சோதனை ஏற்பட்டது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் தகுதி பெற்றவர்கள், என்றாலும் தமிழுக்கு தொண்டாற்றி தங்களையே தியாகம் செய்தபோதிலும் அதை விளம்பரப்படுத்த வாய்ப்பு இல்லாமல் எங்கோ ஒரு மூலையில் அடங்கிமுடங்கி கிடக்கும் தமிழறிஞர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள் அவர்களையெல்லாம் ஒரு சேரவைத்து மரியாதை செய்யமுடியாவிட்டாலும் இது தொடக்கம் தான் என்றிருந்த போதிலும் அந்த தமிழறிஞர்கள் அனைவரையும் தமிழக அரசு நிச்சயம் பாதுகாக்கும் அதற்கான முயற்சிகளை மேற் கொள்ளும்.

இவர்களை மட்டுமே போற்றிமரியாதை செய்வதோடு நின்றுவிடப் போவதில்லை. ஒவ்வொரு ஆண்டும் இப்படி பல்வேறு தமிழறிஞர்களைத் தமிழக அரசு பாராட்டி மரியாதை செய்யவிருக்கிறதுஎன்பதை சொல்லி அதற்கு அடையாளமாக தொடக்கமாகத் தான இந்தவிழாவை நடத்தி இருக்கிறோம்-

### எதிர் காலம்

தமிழறிஞர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களை எல்லாம், நான் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன், உங்களை அலட்சியப் படுத்திவிட்டோம என்றோ உங்கள் தொண்டை தியாகத்தை ஏற்கவில்லை என்றோ கருதி விடாதீர்கள் உங்களுக்கு எதிர்காலம் காத்திருக்கிறது என்பதை இங்கே தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அரசு கலைஞர்களைத் தேர்ந்தெடுக்கும் போது குழல் ஊதுவோரை இன்னமும அறிவிக்கவில்லை. எனவே குழலை மறந்துவிட்டோம் என்றோ புறக்கணித்து விட்டோம் என்றோ நினைக்காதீர்கள் சித்திரைமுதல் நாளில் குழலூதுவோர் ஒருவருக்கு அரசு கலைஞர் விருது தரப்படும் சிலநேரங்களில் பிரச்சினைகள் குறுக்கிடுவதால் சிந்தித்து நிதானமாக முடிவெடுக்க வேண்டியதிருக்கிறது. இப்போது இங்குகுறுகிய எண்ணிக்கையில்தான் தமிழறிஞர்களை மரியாதை செய்ய முடிந்தது. பேரறிஞர் அண்ணா இருந்திருந்தால் இன்னும்பலருக்குமரியாதை செய்திருப்பார் என்பதை நம்மால் உணர முடிகிறது.

எனவே எதையும்தவறாக எடுத்துக் கொள்ளாமல் இங்கே பாராட்டுப் பெற்றவர்களை உடன்பிறப்புக்களாக ஏற்று மனநிறைவோடு ஒத்துழையுங்கள் என்று அனைவரையும் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த நேரத்தில் இங்கே குறிப்பிட்டுப் பேச பல பிரச்னைகள் உண்டு இங்கே இந்த மேடையை அரசியலுக்கு பயன்படுத்தக் கூடாது என்பது மரபு என்றாலும் நான் பதவியிலே இருக்கிற காரணத்தால் ஒரு சிலவற்றைச் சொல்லியாக வேண்டியிருக்கிறது. அது அரசாங்கக் கடமை.

### உயிரினும் மேலான தமிழ்

இங்கே தமிழறிஞர்கள் மரியாதை செய்யப்படுகிறார்கள். இதில் தவறுசெய்தோம் என்று யாரேனும் கருதினால் மனந்திறந்து தெரிவியுங்கள், நியாயம் என்று கருதினால் அதற்காக எங்களுக்கு புகழாரம் சூட்டாவிட்டாலும் பரவாயில்லை இகழாமல் இருந்தால் போதும். தமிழைக் காப்போம் என்று சொல்லும் போது வேறொரு மொழியை அடிப்போம் என்று அர்த்தம் அல்ல.

எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்று சொல்லும் உரிமைக்குச் சொந்தக்காரர்கள் நாம் நம்வழியில் அதற்குத் தடைக்கற்கள் போடப்படுமேயானால் அதை எடுத்து ஒதுக்கும்போது அந்த தடைக்கல்லுக்கு ஆபத்து வருமேயானால் அது நமது பொறுப்பல்ல என்பதையும் சொல்லியாக வேண்டும்.

### கழக அரசின் அழைப்பு

தி.மு.க,வுக்கும வீரமணி தலைமையிலான கழகத்துக்கும் அவர்கள் 26ந் தேதி நடத்தவிருக்கும்துக்கநாளை கைவிடச் சொல்வது பொருத்தமாக இருக்காது என்றாலும்மொழிப்பிரச்சினை ஜாதி, மத, அரசியலுக்கு அப்பால் இருந்து பார்க்க வேண்டியபொதுப்பிரச்சினையாகும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்,

மொழிப் பிரச்சினை என்பது அரசாங்கமும், கட்சிகளும் பிற மத நம்பிக்கை கொண்ட அத்தனை பேரும் ஒருங்கு சேர்ந்து அமர்ந்து அடுத்தது என்ன என்று பேசி மையஅரசுக்குஎடுத்துச சொல்ல வேண்டியபிரச்சினையாகும அப்படியும வழியில்லை என்றால் அரசும் மக்களும் ஒன்று சேர்ந்து நடவடிக்கை எடுக்க வேண்டும்.

### மைய அரசுக்கு ஒருமனதான தீர்மானம்

இன்னும் 4 அல்லது 5 நாட்களில் வாய்ப்பு இருக்கும்போது அனைத்துக் கட்சித் தலைவர்களையும் அழைத்துப்பேச இருக்கிறேன். அந்தக் கூட்டத்தில் ஒருமுகமாக தீர்மானம் நிறைவேற்றி மைய அரசுக்கு தெரிவிப்போம்-

அதை ஏற்க மறுத்தால்-நமது உயிரினும் மேலான தமிழைக் காக்க அனைவரும் நமது பணியினைத் தொடருவோம். வள்ளுவர் விழாவில் இதைச் சொல்வது பொருத்தமானதாக இருக்கும் என்பதால் குறிப்பிடுகிறேன். இது அனைவரின் பிரச்சினை அனைவரும் சேர்ந்து முடிவெடுக்க வேண்டிய பிரச்சினை

கலைஞர்களிடையேயும் சரி- மக்களிடையேயும் சரி போட்டிஇருக்கவேண்டுமே

(2-ம்பக்கம் பார்க்க)

தன்னலமற்ற சேவை புரிந்த கக்கனுக்கு வள்ளுவர் விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் பாராட்டிதழ் வழங்குகிறார்.

## அனைவரும் சேர்ந்து முடிவெடுப்போம்

வள்ளுவர் விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர்செந்தமிழ்ச் செல்வர் பட்டத்தை டி. எஸ். அவிநாசிலிங்கத்திற்கும் அரசுக் கலைஞர் பட்டத்தை வைஜயந்தி மாலா பாலி, மதுரை சோமு இருவருக்கும் வழங்கி கேடயங்களை அளித்தார்,

---

கிரிகெட்:

### இந்தியா வெற்றி

சென்னை, ஜன. 16-சென்னையில் இந்தியாவுக்கும் மேற்கிந்தீவுக்கும் இடையேயான கிரிக்கெட்போட்டியில் இந்தியா 2வது இன்னிங்சில் 7 விக்கெட் இழப்புக்கு 125 ரன்கள் எடுத்துள்ளது இதில் விஸ்வநாத் 31 ரன்களும் கெய்க்வாட் 21 ரன்களும் எடுத்து அவுட் ஆயினர். இந்தியா வெற்றி பெற்றது

❋

எஸ் டி. எஸ். இரங்கல்

### வாண்டையார் மறைவு

தஞ்சை, ஜன. 16-காமராசரின் நெருங்கிய நண்பரும் பழம்பெரும் காங்கிரஸ்காரரும் முன்னாள் சட்டமன்ற மேலவை உறுப்பினருமான பூண்டி கிருஷ்ணசாமி வாண்டையார் நேற்று காலமானார். அவருக்கு வயது 73.

இவர் தஞ்சையில் உள்ள புஷ்பம் கல்லூரியை நிறுவியவர்.

பூண்டி வாண்டையார் என்று பிரபலமாக அழைக்கப்படும் கிருஷ்ணசாமி வாண்டையாரின் மறைவுச் செய்தி அறிந்ததும் தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ், தஞ்சை விரைந்து வாண்டையாருடைய மறைவுக்கு இரங்கல் தெரிவித்தார். மறைந்த வாண்டையார் குடும்பத்தாருக்கு ஆறுதல் கூறினார்.

---

**இன்று மாலை (16-1-79)**

**சென்னை 113-வ வட்டம் டிரஸ்ட்புரத்தில்**

**ஆர். எம். வீ.**

பேசுகிறார்

கூட்ட அமைப்பு: வீரத்தின் சிகரம எம். ஜி. ஆர். பொதுப்பணி மன்றம்.

# ★ உண்மை ஒருநாள் வெளிவரத்தான் போகிறது ★

இந்தியக் கம்யூனிஸ்டு கட்சியின் நாகை நாடாளுமன்ற உறுப்பினர் திரு. முருகையன் கொடியவர்களின் கரங்களில் சிக்கி கத்தியால் குத்துண்டுஉயிர் நீத்தார் என்ற செய்தி கேட்டுப் பதைபதைக்காதோர் இருக்க முடியாது. பம்பரம்போல் சுழன்று கொண்டிருந்தவர் உயிரை சில நொடிப் பொழுதில் பறித்துப் பிணமாக்கி விட்டனா மனித உருவில் நடமாடும் அரவங்கள். கண்டிக்கப்பட வேண்டிய கயவர்கள்! தண்டிக்கப்பட வேண்டிய சமூக விரோதிகள்!

இந்திய கம்யூனிஸ்டு கட்சிக்கு ஈடு செய்ய முடியாத இழப்பு! அவர்கள் பதைபதைப்பதில், பதட்டங் கொள்வதில் ஆத்திரப்படுவதில் ஆவேசங்காட்டுவதில் அர்த்தமிருக்கிறது! நம்மால் புரிந்து கொள்ளவும் முடிகிறது! பொறுத்துக் கொள்ளவேண்டியும் இருக்கிறது. அனல் தி. மு. கழகம் இந்திய கம்யூனிஸ்டு கட்சியினரை விட அதிகமாக அக்கறை காட்டுவதன் பொருள் என்ன?

அரசியல் கட்சிகள் ஆதாயம் தேடுவதில் குற்றமில்லை. ஆனல் பிணத்தைப் படைக்கலமாக ஆக்குவது நியாயமில்லை!

எங்காவது ஒரு கொலை அல்லது இயற்கைக்கு மாறுன மரணம் ஏற்பட்டு விட்டால், உடனே அரசியல்சாயப் பூசுவது சிலருடைய இயற்கை குணம் போலும்! அரசியல் காரணங்களுக்காகவே நடைபெற்ற கொலைகளை அதிகாரத்தைக் கொண்டு மறைத்தவர்களால் இத்தகைய காரியங்கள் எளிதில் முடியும் போலும்!

தோழர் முருகையன் கொலையைக் காட்டி எத்தனை கோலங்களை அரசியல் ஆக்குகிறார்கள்! எத்தனை அரசியல் கொலைகளை திரையிட்டு மறைக்கின்றார்கள்! இந்தக் கலையில் கலைஞருக்கு நிகர் கலைஞர்தான்! ஆனல் தனக்குள்ள சொல்லாற்றல் எழுத்தாற்றல் அத்துணையையும் இத்தகைய கீழ்த்தரமான வேலைகளுக்குப் பயன்படுத்துகிறாரே என்றெண்ணும் போது, ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கவேண்டியுள்ளது.

எங்காவது எழவு விழுந்தாலும் சில தாய்மார்கள் தங்கள் குறைகளைக் கொட்டிக்கொள்ளப் போவார்கள் வேறு சிலர் எழவைப் பயன்படுத்தி பழியைத் தீர்த்துக் கொள்ளப் பாட்டுப்பாடி அழுவார்கள் இத்தகைய குணம் படைத்தவர்களைப் பார்த்து அனுதாபப்படுவதைத் தவிர வேறு வழியென்ன?

கணவனை இழந்தவள் கதறிக் கதறி அழுதால் பார்ப்பவர்கள் கண்கள் நீருறறுக்களாகும் ஆனல் வீதிக் கோடியிலே இருக்கும் விதவைப பெண் விழுந்து விழுந்து அழுதால் பார்ப்பவர்கள் கண்களில் கேள்விக் குறி தோன்றும். சந்தேகிக்காமல் இருக்கமுடியாது. தி மு கழகத்தின அழுகுரலில் சந்தேக வாடை வீசுகின்றது,

**ப. உ. ச. கடிதம்**

கொலை செய்தி அறிந்ததும், முதல்வர் தன் நிகழ்ச்சிகளை ரத்து செய்து விட்டு நாகைக்கு விரைந்து சென்றிருக்கின்றார், கண்ணீர் மல்க, மறைந்த முருகையன் உடல் மீது மலர் வளையம் வைத்து மரியாதை செய்து, இடுகாடு வரை நடந்து சென்று, இரங்கல் கூட்டத்தில் கலந்துகொண்டிருக்கின்றார், இதைவிட வேறு எவர்தான் என்ன செய்ய இயலும்?

**திமுக ஆட்சியில் இருந்த போது, தோழர் சிந்தன் பயங்கரமாகக் கத்தியால் குத்தப்பட்டாரே அவரை மருத்துவ மனையில் அன்றைய முதலவர் சென்று விசாரிக்கும் நாகரிகம் பெற்றிருந்தாரா? யாராவது கைது செய்யப்பட்டார்களா?**

கொலை நடந்து விட்டது! வருந்தத் தக்கது!

நாகைத் தொகுதியில் நள்ளிரவில் ஓர் குக்கிராமத்தில் நடக்கக்கூடாத சம்பவம் நடந்துவிட்டது. நாட்டில் சட்டம் அமைதி கெட்டு விட்டதற்கு இதுதான் அடையாளமாம்.

பூலாவரி கொலைகள், சட்டஒழுங்கிற்கு சிறப்பான சான்றுகள் போலும்!

நடந்துவிட்ட கொலையை விசாரிக்க காவல்துறையினர் சிலரைக் கைது செய்துள்ளனர் அதற்குள் அவர்களை ஏன் குழப்ப வேண்டும்?

கொலைக்குக் காரணம் நிலத்தகராறு என்று காவல்துறை அதிகாரி ஒருவர் கூறிவிட்டார் என்று கலைஞர் ரொம்பவும் வருத்தப்பட்டுக் கண்டிக்கிறார் இதே கருத்தைக் கம்யூனிஸ்டு கட்சியின் தலைவர் திரு. கல்யாணசுந்தரம் தன் அறிக்கையில் திரு. தேவாரம் கூறியதற்கு முன்பே கூறிவிட்டாரே இதற்கு தி.மு.க தலைவரின் பதில் யாதோ?

**திரு. முருகையன் உடல் மீது மலர்வளையம வைத்தார் முதல்வர் ஆனல் தி.மு கழகத்தின தலைவர்கள் யாரும் அங்கே போகவில்லை ஆனல் இரங்கற்கூட்டத்தில் தி மு க தலைவர் பேசுகிறாராம ஆளும் கட்சியை அழைக்க வில்லை. ஏன்?**

**பிடிபட்டுள்ள போஸ் அனைத்திந்திய அண்ணா தி. மு. க என்றே வாதத்திற்காக வைத்துக் கொள்வோம் அந்த நபரைக் கைது செய்த அரசை முதலவரைபாராட்ட வேண்டாமா?**

"காட்டூர் பூலாவரி ஆகவில்லையே? ஏன் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தை இரங்கற் கூட்டத்திற்கு அழைக்கவில்லை? இந்த அநாகரிகத்திற்கு யார் காரணம்) இதைப்பிரசுரித்து அற்ப மகிழ்ச்சி கொள்ளும் கீழ்த்தரமான ஏடுகளின்போக்கினையும் இரங்கற்கூட்டத்தில்அனைத்திந்திய அண்ணாதி.முகழகத்தை அழையாததையும் பார்க்கும் போது, ஆட்சியின் மீது பொறுமை கொண்டவர்கள் நடத்துகின்ற அரசியல் சதி நாடகம் இது என்றே தோன்றுகிறது.

அரசியலிலே சந்தர்ப்பங்களுக்காகக் காத்திருக்க வேண்டியதுதான் ஆனல் தற்செயலாக ஏற்பட்டு விடும் கொலைகளைத் தங்கள் ஆதாயத்திற்காகப் பயன்படுத்துவது நாணயமுள்ள அரசியல்வாதி செய்யக்கூடியதல்ல.

போராட்டம் - கடை அடைப்பு - வேலைநிறுத்தம் - கலவரம் - சண்டைக் கூட்டம் நடத்த ஏதேனும் ஓர் காரணம் - கருப்புக் கொடி - எங்காவது துர்பாக்கிய வசமாக ஏற்பட்டுவிடும் கொலை - துப்பாக்கிப் பிரயோகம் இவைகளுக்காக மோப்பம் பிடித்தலைவதையே தொழிலாகக் கொண்டிருக்கும் கட்சிகள் திருந்தவே திருந்தாது போலும்!

**செத்தவர்களைத் தங்கள் அரசியல் வாழ்வின் படிக்கட்டுகளாகப் பயனபடுததிக் கொள்வது நல்லதல்ல,**

காட்டூர் கோபால்
சிட்டிபாபு
முருகேசன் (மாநகராட்சி உறுப்பினர்)
இளஞ்செழியன்
கடலூர் இளம்வழுதி
வேலூர் சாரதி
சென்னை தீனன்
பாபு

இப்படிப்பட்டவர்களின் சவங்களைப் படிக் கட்டாக்கிக் கொண்டவர்கள் அவர்களின் குடும்பங்கள் என்ன ஆனது என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும். அந்தத் தாயவர்களின் குடும்பங்கள் திண்டாடும் கொடுமைகளைக் களைய மனமில்லை!

தாழ்ந்துபோன அந்தக் குடும்பங்களையும் காண்கின்றேன். அவர்களின் குடும்பத் தலைவர்களைப் படிக்கட்டாக பயன்படுத்தியோர் கட்டியுள்ள மாளிகைகளையும் காண்கின்றேன்.

**உண்மை, ஒருநாள் வெளிவரத்தான் போகிறது.**

அன்புள்ள
**ப. உ. ச.**

---

புரட்சித்தலைவர் திட்டம்

# தாழ்த்தப்பட்ட மக்கள் உயர்விற்காக ரூ. 16 கோடி ஒதுக்கீடு

அமைச்சர் கே. ஏ. கே. தகவல்

சென்னை. ஜன 16 ஐந்து கோடிப்பேர் உள்ள தமிழகத்தில் ஒரு கோடிப்பேராக உள்ள தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட, மக்களின் முன்னேற்றத்திற்காக முதல்வர் புரட்சித்தலைவர் 16 கோடி ரூபாய் ஒதுக்கி திட்டங்களை வகுத்துள்ளார் என்று அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

செங்கல்பட்டு மாவட்டம் அச்சிறுப்பாக்கத்தில் 2 லட்சத்து 60 ஆயிரம் ரூபாய் செலவில் அரிசன நலத்துறையினரால் கட்டப்பட்ட அரசினர் மாணவர் விடுதி திறப்பு விழா நடைபெற்றது.

இந்த விழாவுக்கு தமிழக கூட்டுறவுத் துறை அமைச்சர் கே. ஏ. கே. தலைமை வகித்துப் பேசியதாவது:

நசுக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட மக்களுக்கு 20மாதங்களாக புரட்சித்தலைவர் பல்வேறுபணிகளைச்செய்துவருகிறார். இந்த (செங்கல்பட்டு) மாவட்டத்தில் மாணவர் விடுதிகள் 10துவக்க திட்டமிட்டு அதில் 8, 9 கட்டி முடித்து திறக்கப்படும் தருவாயில் இருக்கிறது.

இந்தத்துறைக்கு புரட்சித்தலைவர் ஆட்சியிலே 16 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது, கல்விக்காக, பள்ளி மாணவர் விடுதிக்காக கல்லூரி மாணவர் விடுதிக்காக, சுகாதாரமுன்னேற்றத்திற்காக, விவசாயத்தில் மேன்மை பெறுவதற்காக உதவிகள் வழங்கப்படுகின்றன.

தாழ்த்தப்பட்ட மக்களின் இல்லத்தில் இயற்கையின் அவலம் ஏற்பட்டால் அதற்கு உதவி செய்வதற்காக 34 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டு, மக்களுக்கு ஆறுதல் அளிப்பதற்காக செலவு செய்யப்பட்டு வருகிறது.

கடந்த 30 ஆண்டுகளாக தாழ்த்தப்பட்ட மக்களின் முன்னேற்றத்திற்காக பாடுபட்டு வருகிற நாங்கள் இன்றைக்கு சற்று புத்துயிர்க் கொள்கையாக எடுத்துக்கொண்டு வேகமாக விறுவிறுப்பாக காரியங்களை செய்துவருகிறோம்

மதிப்பிற்குரிய கக்கன் தேசியப் போராட்டத்தளபதியாக திகழ்ந்தார். காமராஜரின் நண்பராகஇருந்த கக்கன், 10 ஆண்டு காலம் அமைச்சர் பொறுப்பிலே இருந்தவர்.

## கக்கனுக்கு செய்த உதவி

அவர் இன்றைக்கு மிகவும் கஷ்டமான சூழ்நிலையில் இருக்கிறார். பொது வாழ்வில் முன் உதாரணமாக இருக்கும் அந்த நல்ல உள்ளத்திற்கு வாழ்நாள் முழுவதற்கும் மாதா மாதம் 500 ரூபாய்உதவிப் பணம், போக்குவரத்துச் செலவு, வைத்திய வசதி ஆகியவற்றை முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்திருக்கிறார்.

உண்மையானதொண்டுள்ளத்திற்கு உதவ வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறியிருக்கிறார்.

கடந்த ஐந்தாறு நாட்களாக சென்னையிலே 12ஆயிரம் 15 ஆயிரம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அரிசி உடை பணம போன்ற நிவாரண உதவிகளை வழங்கிவருகிறோம்,

அங்கு வந்து உதவி பெற்ற தாய்மார்கள் ஒரு மூக்குத்திகூட இல்லாமல் இருந்தார்கள் காதுக்கு கம்மல் இல்லை. கிழிந்த உடையை உடுத்தி இருந்தார்கள். அவர்களுக்கு 50 கிலோ அரிசி கொடுப்பதில் தவறு இல்லை அல்லவா?

அமைச்சர் சவுந்தரபாண்டியன் எதிர்க்கட்சி வரிசையிலேயே இருந்தபோதே - தாழ்த்தப்பட்ட மக்களுக்காக சட்டமன்றத்திலே வாதிட்டவர். அப்படிப்பட்ட அவர் இன்றைக்கு இத்துறை மக்களின் பிரச்சினைகளை அலசி ஆய்ந்து திறம்படப் பணியாற்றி வருகிறார்.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. பேசினார்.

---



---

## சரண்சிங் துணைபிரதமர் ஆகிறார்

புதுடெல்லி, ஜன. 16 ஜெயப்பிரகாஷ் நாராயணன் யோசனைப்படி சரண் சிங்குக்கு துணைப் பிரதமர் பதவி கொடுக்க பிரதமர் மொரார்ஜிதேசாய் ஒப்புக் கொண்டதாகத் தெரிகிறது. நிதிஇலாகா அல்லது உணவுஇலாகா அவருக்குக் கொடுக்கப்படலாம் என்று தெரிகிறது ராஜ்நாராயணனுக்கு அமைச்சர் பதவி கொடுக்க முடிவு எடுக்கப்படவில்லை.



---

★தமிழறிஞர்களுக்கு அதிக ஓய்வூதியம் ★எழுத்து சீர்திருத்தம் உயிர்எழுத்து நீங்காது

# திருவள்ளுவர் விழாவில் புரட்சித்தலைவர் பேச்சு:

[ முதல் பக்கத் தொடர்ச்சி ]

தவிர பொறுமை இருக்கக் கூடாது. எப்பொழுதோ நடக்கவேண்டிய நல்ல காரியம் இப்போது நடந்திருக்கிறது காலம்தாழ்ந்து விட்டது.

இங்கே மரியாதை, பாராட்டு பெறுதவர்களுக்கு தகுதி இல்லை என்று அர்த்தமில்லை. சில நேரங்களில் திறமை இருப்பவர்கள் நம்மிடையேஇருந்தும் நமக்குத்தெரிவதில்லை என்றாலும் நம்மவர்கள் புகழை நாம் உயர்த்தாமல் யார் உயர்த்தப் போகிறார்கள்? நம்மவர்களை முதல்ல நாம மதித்துப் போற்றிப் பாராட்டும் மன மாற்றம் வந்தாகவேண்டும். நம்மவர்களைப் பாராட்டும் பண்பு நமக்கு வந்தாக வேண்டும்.

## 250 ரூபாயாக ஓய்வூதியம் அதிகரிப்பு

தமிழறிஞர்களுக்கு ஓய்வூதியமாக 100 ரூபாய் தரப்படுகிறது. இது போதுமா என்றால் போதாது. இது அச்சாரமே தவிர ஊதியமே அல்ல. தமிழக மக்களின் காணிக்கை அவர்களுக்கு நாம் செலுத்தும் நன்றிக்கடன்.

தமிழறிஞர்களுக்கு ஓய்வூதியமாக ரூ. 250 தரப்படும். இதுவும் போதுமா என்றுகேட்டால்எங்களால் (அரசால்) அவ்வளவு தான் முடியும். அதிகமாகத் தர வேண்டும் என்பது என் ஆசை.

என்னிடமிருந்தால் நிச்சயம் தருவேன். ஆனல் என்னிடமில்லை.

இதனல் நான் ஏழையாகி விட்டேன் என்றால் இல்லை. முன்னைவிட இப்போது நான் பணக்காரன் தான்.

முன்பு எனது வீட்டு செலவுக்குமட்டுமே ஆயிரக் கணக்கான ரூபாயில் நான் திட்டமிடுவேன் இப்போது நாட்டுக்காக கோடிக் கணக்கில் திட்டமிட்டு செலவிட வேண்டியதிருக்கிறது.

## ரூ. 3 ஆயிரம் கோடி தேவை

ஐந்தாண்டுத் திட்டத்துக்காக தமிழ்நாட்டுக்கு மைய அரசு 2500 கோடி ரூபாய் ஒதுக்குகிறது நாம் 3 ஆயிரம் கோடி தேவை என்று சொல்கிறோம். தமிழ்நாட்டு மக்கள் ஒன்றுபட்டு விரும்பினால் இந்தத் தொகையை மைய அரசு தரும், அப்படித் தந்தால் மக்களின் துன்பத்தைப்போக்க முடியும். அதற்கான திட்டங்களை செயலாக்க முடியும்.

வெள்ளப்பகுதிக்கு நான் சென்றபோது தங்களுக்கேற்பட்ட பெரும் துன்பத்தையும் மறந்து தங்களின் குழந்தைகளுக்கு பெயர் சூட்டுமாறுபுன்னகையுடன் என்னிடம் தந்தபோது தாய்மார்கள் தமிழ்நாடு அரசை எந்த அளவுக்கு நம்பி இருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது.

## உழைப்போம் உயர்வோம்

இந்தியாவில் அதிகம் படித்தவர்கள் உள்ள மாநிலம் தமிழகம் என்ற நிலைவர அனைவரும் உழைத்தாக வேண்டும். விவசாயிகள் உற்பத்தி செய்யும் பொருளுக்கு உற்பத்திச் செலவுத் தொகை கிடைப்பதில்லை. பிரச்சினை ஏற்படுகிறது. விலைவாசி உயர்வு ஏற்படாமலும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும், உழைக்க வேண்டும் இங்கே பாராட்டுப்பெற்றவர்களை நான் விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்வது அனைவரது உள்ளங்களிலும் ஒருமை உணர்ச்சியை ஏற்படுத்த உதியவைக்க உங்கள் கலைத் திறமையை பயன் படுத்த வேண்டும.

தமிழக அரசு தமிழுக்காக கடமையைச் செய்யும் எந்தெந்த வகையில் திட்டங்கள் என்பது வரவிருக்கிற நிதி நிலை அறிக்கையில் வெளியிடப்படும்

## எழுத்து சீர்திருத்தம்

கட்சியை ஒதுக்கி விட்டு, ஜாதியை ஒதுக்கி விட்டு மதத்தை ஒதுக்கிவிட்டு தமிழைப் போற்றிப் பாதுகாத்து வளர்ப்பதில் நாமனைவரும் ஒன்றுபட்டுச் செயல்படவேண்டும். நாங்கள் நினைப்பதில் தவறு இருந்தால் சொல்லுங்கள்.

தமிழ் எழுத்து சீர்திருத்தம் பற்றி குறிப்பிட்டனர் உயிர் எழுத்தில் மாற்றம் தேவையில்லை மாற்றமுடியாது இப்போது பிரச்சினை வராது என நினைக்கிறேன். அனைவரும் ஒத்துக்கொள்வார்கள் எதிர்க்க மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

சங்ககால இலக்கியங்களை போற்றிப் பாதுகாக்க வேண்டியதிருக்கிறது தமிழைக் காப்பாற்றியாக வேண்டும். இதை அனைவரும் சேர்ந்து ஒருசேர ஒரே குரலாக ஒலித்தாக வேண்டும். இந்த பிரச்னையில் தமிழ் முன்னால் அரசியல் பின்னால் என்று கொள்ளவேண்டும்.

## தமிழே ஆட்சிமொழி

தமிழையேஆட்சிமொழியாகவும் நீதிமன்றங்களில் வழக்கு மொழியாகவும் ஏற்போம் இந்தியை ஆட்சிமொழியாகஏற்கமுடியாது இதற்கு அனைவரும் ஒத்துழைக்க வேண்டும்.

இப்படி ஒன்றுபடுவோமானல் போராட்டம் வேண்டியதில்லை ஊர்வலம் தேவை இருக்காதுமொழிப் பிரச்னையில் அனைவரும் ஒன்றுபடுவோம். ஒரே குரலாக ஒலிப்போம், எல்லோரும் வாழ உழைப்போம். அனைவரும் ஓர்இனம் ஒரே தேவன் என்று முழங்கிச் செயல்படுவோம்.

பேரறிஞர் அண்ணாவழியில் உண்மை வழியில் தடம் பிறழாமல் நடப்போம் என உறுதி கொள்வோம்''

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

வள்ளுவர் விழாவைத துவக்கி வைத்த தமிழக ஆளுநர் பட்வாரி, முதல்வர் புரட்சித்தலைவர், நாவலா அமைச்சர்கள் தமிழ் அறிஞர்கள்

---

அண்ணா தொழிற்சங்கப் பேரவைப்பொதுச்செயலாளர்

## வை. பெருமாள் நிகழ்ச்சிகள்

ஜன, 16. நெய்வேலி
17 சென்னை (குறைந்த பட்ச ஊதியக் குழு கூட்டம)
18 அரியலூர்
19 திருச்சி, பிற்பகல் 2 மணி: பிரதிநிதிகள் கூட்டம்
இரவு கரூர் பொதுக் கூட்டம
20, 21 சென்னை
22 காட்பாடி (ஐடிஐ தொழிற்பயிற்சி நிலையம்)
23 சென்னை, செங்கை தொழிற்பயிற்சி நிலையங்கள்
24, 25 கோவை
26 ஆவடி.

★ தியாகச்செம்மல் கக்கன் - தமிழ் அறிஞர்கள் - கலைஞர்கட்கு விருது - பாராட்டு
★ ஓய்வு பெற்ற தமிழாசிரியர்கட்கு உதவி நிதி
★ நாதசுரம் கற்கும் மாணவர்கட்கு உதவி
★ தமிழில் சிறந்த வரைவு எழுதியவர்கட்கு பரிசு

## புரட்சித்தலைவர் அரசு எடுத்த

# வரலாறு காணாத வள்ளுவர் விழா



**சென்னை, ஜன 16 வான்புகழ் கொண்ட வள்ளுவருக்கு புரட்சித்தலைவர் தலைமையில் உள்ள கழக அரசு வரலாறு காணாத முறையில் சிறப்பாக விழா நடத்தியது.**

இந்த விழாவில் தியாகச் செம்மல்கக்கனுக்கு உதவியும் தமிழ்தொண்டாற்றிய சான்றோர்களுக்கும் தமிழ் அறிஞர்களுக்கும், கலைஞர்களுக்கும் விருதுகளும் வழங்கப்பட்டன.

இந்த வரலாற்றுச்சிறப்பு மிக்க நிகழ்ச்சி நேற்று வள்ளுவர் கோட்டத்தில் நடந்தது.

திருவள்ளுவர் திருநாள் மாலை நிகழ்ச்சிக்கு நாவலர் தலைமை வகித்தார்.

திருவள்ளுவர் திருநாள் மாலை நிகழ்ச்சிக்கு வள்ளுவர் கோட்டமே திக்குமுக்காடும் வகையில் மக்கள் கூடியிருந்தனர் செய்தி சுற்றுலாததுறை அமைச்சர் ஆர்.எம்.வீ வரவேற்புரை நிகழ்த்தினர்.

பிற்பகல் நிகழ்ச்சியின் சிகரமாக விருது வழங்கும் விழா நடைபெற்றது.

பொதுவாழ்வில் ஈடுபட்டவர்கள் அமைச்சர்களாக இருப்பவர்கள் எப்படி தூய்மை வாழ்வு வாழ வேண்டும் என்று எடுத்துக் காட்டாக வாழ்ந்துவரும் தியாகச் செம்மல் கக்கனுக்கு அரசின் ஆணையை முதல்வர் வழங்கினார்.

நடக்கஇயலாத சுதந்திரப் போராட்ட வீரரானகக்கனை மேடைக்கு ஒரு நாற்காலியில் உட்காரவைதது தூக்கி வந்தனர்,

முதலவா புரட்சித் தலைவா மேடைக்கு வந்ததும் கக்கனின் கையைபிடித்து வணக்கம் கூறி நலன் விசாரித்தார்.

முன்னாள் அமைச்சர் கக்கன் குடியிருக்கும்வீட்டுச்கு அவர் வாழ்நாள் வரை வாடகையை அரசுசெலுத்தவும், மாதம் ரூ. 500 உதவித்தொகையும், அரசு பேருந்துகளில் இலவசப் பயணமும், மருத்துவ வசதியும் தர வகை செய்யும் ஆணை தரப்பட்டது.

கக்கனுக்கு முதல்வர் பட்டாடை போர்த்தி அரசின் ஆணையை வெள்ளிப்பேழையில்வைத்துக்கொடுத்தார்.

அதன் பிறகு தமிழ் தொண்டாற்றிய ஐந்து அறிஞர் பெருமக்களுக்கு செந்தமிழ்ச்செல்வர் என்ற சீரிய விருது வழங்கப்பட்டது.

தி. சு. அவிநாசிலிங்கம், மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார், இசைப் பேரறிஞர் ம. ப. பெரியசாமி தூரன், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் வ. சுப்பையா ஆகியோருக்கு செந்தமிழ்ச் செல்வா விருது வழங்கப் பட்டது

இவர்களின் புகழினையும் இவர்கள் ஆற்றிய தமிழ் தொண்டினையும் அவ்வை நடராசன் படித்தார்.

### பதக்கம் பட்டயம்

இந்த 5 அறிஞர்கட்கும் முதல்வா புரட்சித்தலைவர் பட்டாடை போர்த்தி பச்சை நாடாவில் கட்டப் பட்டபதக்கததை அணிவித்து பட்டயத்தையும் வழங்கினர்.

அதன்பிறகு அரசுக் கலைஞர் விருது வழங்கும் விழா நடந்தது.

குரலிசைக்கு மதுரை சோமுவும், பாலமுரளி கிருஷ்ணவும் நரப்பிசைக்கு லால்குடி ஜெயராமனும், முழவிசைக்கு சி எஸ் முருகபூபதியும் யாழிசைக்கு க.பி சிவானந்தமும், நாயன இசைக்குநாயகர்ப் பேட்டை கிருஷ்ணனும் நாயன முழவிசைக்கு ஏ சண்முக சுந்தரமும், ஆடற்கலைக்கு வைஜயந்தி மாலாவும் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

இவர்களது கலைப்பணிகளை டி வி என் படித்தார்,

இவர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பொன்னாடைபோர்த்திபதக்கத்தையும் பட்டயத்தையும்வழங்கினர்.

அதற்கு பிறகு 28 தமிழறிஞர்கட்கு ஓய்வு ஊதியத்தையும் முதல்வா புரட்சித்தலைவர் வழங்கினர்

### சிறந்த தமிழ் வரைவு

தமிழில் சிறந்த வரைவு எழுதிய நான்கு அரசு ஊழியாகட்கு முதல்வர் பரிசுகளை வழங்கினர்.

நாயனப் பள்ளிகளில் பயின்ற சிறந்த மாணவர்களுக்கும் முதல்வர் உதவித் தொகை வழங்கினர்

விழாவில் முதல்வர்புரட்சித் தலைவா சிறப்புரை ஆற்றினர்.

அமைச்சர் அரங்கநாயகம், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம், மதுரை காமராஜ் பல்கலைக்கழக துணைவேந்தர் வி சி குழந்தைச்சாமி, அ ச ஞானசம்பந்தம், நிர்மலா சுரேஷ் ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு பேசினர்கள்.

முதல்வர் புரட்சித்தலைவர் சிறப்புரைக்குப் பிறகு அரசுக் கலைஞர்களின் இசை நடன நிகழ்ச்சி நடைபெற்றது.

## சரண்சிங் - ஜெகஜீவன் வாய்ச்சண்டை

**புதுடெல்லி. ஜன 16- ஜனதாக் கட்சி தேசிய நிர்வாகக்குழு கூடடததில் பாதுகாப்பு அமைச்சர் ஜெகஜீவன்ராமும சரண்சிங்கும நேரடியாக மோதிக்கொண்டனர்**

டெல்லியில் ஜனதாக் கட்சிநிர்வாக குழுகூட்டம் நடந்தது.

ராஜ்நாராயணன்பேசுகையில் ஜெகஜீவன்ராமைக் கடுமையாகச்சாடினர். சரண்சிங் போன்றவர்கள் ஜனதாவை விட்டு வெளியேறினலும் பாதகம் இராது என்று ஜெகஜீவன்ராம் கூறியதை ராஜ்நாராயணன் கண்டித்தார்.

இதைத் தொடர்ந்து நிர்வாகக்குழு கூட்டத்தில் கூச்சல் குழப்பம் ஏற்பட்டது.

சரண்சிங் குறுக்கிட்டு ஜெகஜீவன்ராம் போன்ற பொறுப்பான தலைவா என்னைப்போன்ற மற்றவர்கள் வெளியேற நினைத்தாலும் போகவிடமாட்டார் என்று எதிர்பார்த்தேன் ஆனல் மாறாக சில தலைவர்கள் வெளியேறினலும்கட்சி பலம் குறையாது என்று அவர் கூறி இருக்கிறா" என்று குறிப்பிட்டார.

ஜெகஜீவன்ராம் தாம் கூறியதை மறுக்கவில்லை. ஆனல் மேற்கு வங்க ஜனதாக் கட்சியின் சிலதலைவர்களின் போக்கைப் பற்றித் தாம் அவ்வாறு கூறியதாகச்சொன்னா.

இந்த விவகாரத்தை இத்துடன் முடித்துக் கொண்டு அடுத்த முறை தேசிய நிர்வாகக்குழு கூடும்போது இதுபற்றி விவாதிக்கவேண்டும்

என்று சந்திரசேகர கூறினர்.

இவ்வாறு பின்னர் விவாதிப்பதைத் தாம்வரவேற்பதாக ஜெகஜீவன்ராம் கூறினர்.

மொராாஜி அரசுக்குஎதிராக குஜராத் பாணியிலான போராட்டத்தைத் துவக்க வேண்டும் என்று ராஜ்நாராயணன் கூறியது பற்றி விவாதிக்கவேண்டும என்று கிருஷ்ணகாந்த் கூறினா.

ராஜ்நாராயணன் குறுக்கிட்டு தத்துவார்த்தமாகத் தான் அப்படிச்சொன்னேன் வார்த்தைக்கு வார்த்தை அப்படியே எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதில்லை" என்று சமாளித்தார்.

சரண்சிங்கும், ஜெகஜீவன்ராமும் நேருக்கு நேர் கருத்து மோதலில் ஈடுபட்டது போல் நிர்வாகக் குழுவில் சில தலைவர்கள் பேசும் போது மோதல் நிலைமை ஏற்பட்டது.

பகுகுணா, ரவீந்திரவர்மா கிருஷ்ணகாந்த் மற்றும் பலர் சரண்சிங்கையும் அவரது ஆதரவாளர்களையும் கடுமையாகத் தாக்கிப்பேசினர்கள். சரண்சிங்கும் அவரது ஆதரவாளர்களும் தனி கட்சியினர் போல செயல்படுகிறார்கள் என்று அவர்கள் குற்றம் சாட்டினர்கள்.

கட்சியில் ஒழுங்கீனம் கள் வளர்ந்து வருவதாகக் கூறி அது பற்றித் தக்க நடவடிக்கை எடுக்க விவாதிக்க வேண்டும் என்று உறுப்பினர்கள் சிலர் கேட்டுக் கொண்டனர்.



## இந்தியாவுக்கு வழி காட்டுவது தமிழகம்: ம. பொ. சி. பேச்சு

**சென்னை, ஜன. 16— கலைகளுக்கெல்லாம் இருப்பிடமாக இந்தியாவுக்கே வழிகாட்டியாகத திகழ்வது தமிழகம்தான் என்று சட்டமன்ற மேலவைத்தலைவா சிலம்புச்செல்வர் ம. பொ. சி கூறினர்.**

எம்,எஸ். கோபால் எழுதிய 'விளம்பரப் புலி', இல. முனிவேலு எழுதிய 'சமுதாயப் பாதையிலே' நூல்கள் வெளியீட்டு விழா பொங்கலன்று ராமகிருஷ்ண ஆண்கள் பள்ளி கலையரங்கில் நடைபெற்றது.

விழாவிற்கு தமிழக அரசின் (டெல்லி) சிறப்புப் பிரதிநிதி க. ராசாராம் தலைமை வகித்து 'விளம்பரப்புலி' நூலை வெளியிட்டார் முதல் பிரதியை வானெலி நிலைய இயக்குநர் எஸ் கந்தசாமி பெற்றுக்கொண்டுவாழ்த்தி பேசினர்.

முனனாள் முதல்வர் எம். பக்தவத்சலம் 'சமுதாய வீதியிலே' என்ற நூலை வெளியிட்டு உரையாற்றினா.

தமிழ்நாடு பள்ளிக் கல்வி இயக்குநர் கே. வெங்கட சுப்பிரமணியன், எம். எஸ். கோபால் ஆகியோர் பேசினர்

சிலப்புச் செல்வர் ம பொ சி பேசும்போது கூறியதாவது:

எனக்கு திரைப்படங்களைவிட நாடகங்கள் பார்ப்பதில் அதிக விருப்பம்.

தமிழ் மொழியில்தான் இயல், இசை, நாடகம் என்று பிரித்து நாடகத்திற்குசிறப்பளித்திருக்கிறார்கள். வேறு எநத மொழியிலும் இத்தகைய சிறப்பினைக் காண இயலாது.

மஞ்சள் பத்திரிகையை வைததுக்கொண்டு மற்றவர்களைத் தாக்கி பிழைப்பு நடத்துபவர்களைப் பற்றி விளம்பரப்புலிநாடகத்தில் குறிப்பிட்டுளளார்.

இந்தியாவுக்கே வழிகாட்டியாகபலகலைகளிலும் தமிழகம் முன்னணியில் நிற்கின்றது ஆனல் இங்கு ஒரு எழுத்தாளன் நிம்மதியாக வயிறு வளர்க்கின்ற அளவுக்கு வளரவில்லை புத்தகங்களைக்காசு கொடுத்து வாங்கிப் படிக்கின்ற நிலை இன்னும் வளர வேண்டும் எழுத்தாளனுக்கு வாழ்வுதரவேண்டும் என்றால் புத்தகங்களைவாங்கிப் படிக்கின்ற தன்மை மேலும் வளரவேண்டும்.

இவ்வாறு சிலம்புச்செல்வர் ம. பொ. சி. கூறினர்

### க. ராசாராம்

தமிழக அரசின்(டெல்லி) சிறப்புப் பிரதிநிதி க. ராசாராம் பேசும்போது கூறியதாவது:

"சமுதாயத்துக்குத் தேவையான, சாதி ஒழிப்பு போன்றவைகள் அடிப்படையில் நாடகங்கள் எழுதப்படவேண்டும். தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, மூதறிஞர்ராஜாஜி போன்ற பல பெரியவர்கள் பல்லாண்டுகளாகப் பாடுபட்டும் இன்னமும் சமுதாயத்தில் மாற்றத்தை உண்டாக்க வேண்டிய நிலை இருக்கின்றது. நாடகங்கள் பழைமையை நோக்கி ஓடிய போது பெரும் மாற்றமும் மறுமலர்ச்சியும் ஏற்படக் காரணமாக இருந்தவர் பேரறிஞர் அண்ணாதான். வேலைக்காரி, ஓர் இரவு நாடகங்கள் கலையுலகில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தின. அந்த நாடகங்களைப் பார்த்து விட்டு, தந்தை பெரியார் நான் 10 கூட்டங்களில் பேசுவதைவிட ஒருநாடகத்தின் மூலம் சிறப்பாக அண்ணா பிரச்சாரம் செய்கிறார் என்று கூறினர்.

கிராம மக்களுக்கும், சமுதாயத்திற்கும் பயன்படும் வகையில் இளைஞர்கள் நாடகங்களை எழுத வேண்டும். அதனை வானெலி நிலையத்தினர் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு க. ராசாராம் பேசினர்.

துவக்கத்தில் இல. முனிவேலு அனைவரையும் வரவேற்றார் இரா. பழனியப்பன் வடிவேலு இருவரும் சிறப்பாக விழா ஏற்பாடு செய்திருந்தனர்.

கோபால் எழுதிய நோய்க்கு இடங்கொடேல் என்ற நாடகம் இறுதியில் நடைபெற்றது.

### முகவரி

சோவை தா. மலரவன்
9-14 தொட்டராயன் கோயில் தெரு
காட்டூர்
கோயமுத்தூர் - 641009

தமிழறிஞர்கள்- கலைஞர்களை வாழும் காலத்திலேயே பாராட்டும்

## புரட்சித்தலைவரின் புரட்சி செயல்கள் கண்டு என் உள்ளம் பொங்குகிறது

முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. பாராட்டு

**சென்னை, ஜன 16 தமிழ் அறிஞர்களையும் கலைஞர்களையும் அவர்கள் வாழும் காலத்திலேயே பாராட்டும் புரட்சித் தலைவரின் புரட்சிச் செயல் கண்டு என் உள்ளம் பொங்குகிறது என்று முத்தமிழ்க்காவலர் கி ஆ பெ விசுவநாதம் பாராட்டிப் புகழ்ந்தார்.**

வள்ளுவர் கோட்டத்தில் நடந்த திருவள்ளுவர் திருநாளில் லந்து கொண்டு கி ஆ பெ விசுவநாதம் பேசுகையில் கூறியதாவது:

திருக்குறளில் ஐந்துசிறப்புக்கள் இருக்கின்றன. மனிதன்மனிதனுக்காகச் சொல்லப்பட்டு இருக்கிறது. மனிதனை நடக்க கற்றுத் தருகிறது. மனிதன் கேட்க மனிதன் சொன்ன கருத்துக்கள் அவை.

ஆசைகள் அச்சுறுத்தல்கள் இதில் கிடையாது நன்று தான் சொல்லி இருக்கிறது- குறள் ஒரு வாழ்வு நூல்

அப்படிப்பட்ட திருவள்ளுவருக்கு விழா எடுக்கப்பட்டுள்ளது

புரட்சித் தலைவர் என்ற பெயருக்கு ஏற்ப புரட்சிகரமான செயல்களை செய்து வருகிறார்.

இதனைப் பார்த்து என் உள்ளம் பொங்குகிறது. பொங்கலைவிட அதிகமாகப் பொங்குகிறது.

கலைஞர்கள் உயிரோடு இருக்கும் வரை யாரும் பாராட்டுவதில்லை.

செதத பிறகுதான் பாராட்டுவார்கள் போற்றுவார்கள். மணிமண்டபம் கட்டுவார்கள் பூங்காவிற்கும் மற்ற இடங்களுக்கும் அவர்களது பெயர்களை வைப்பார்கள்.

அவர்கள் வாழும் காலத்திலேயே பாராட்டும் புரட்சியைபுரட்சித்தலைவர் செய்துள்ளார் அவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் இது நாம் பெற்ற பேறுகும்

அறிஞர் அண்ணா நல்ல தம்பிகளை நாடடுக்காக உருவாக்கியிருக்கிறா.

இந்த வள்ளுவர் கோட்டத்தை திருக்குறள் பிரச்சாரத்திற்கு பயன்படுத்தப் போவதாக அறிந்தேன். இதனால் புரட்சித் தலைவர் பெருமை உயரும்.

இவ்வாறு கி. ஆ. பெ. விசுவநாதம் பேசினர்.

### 115-வது வட்டத்தில் திருநாவுக்கரசு அரிசிவழங்கினர்

சென்னை, ஜன. 16- சென்னை 115 வது வட்டத்தில் சோமசுந்தர பாரதி நகர் நஜூம் கார்டன் பகுதியில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு துணை சபாநாயகர் திருநாவுக்கரசு தலா 50 கிலோ அரிசி, துணிமணிகளை வழங்கினர். தி. நகர் தொகுதி அமைப்பாளர் சா. கோவிந்தசாமி, சந்திரா. ஏ. பி. வரதராசன், சுப்பையா, சா. ஏழுமலை பி. ராமச்சந்திரன், எம். கானமுடையான், ராமலிங்கம், மணிமாறன், சீனிவாசன் ஆகியோர் உடன் இருந்தனர்.

# அண்ணா




சென்னையில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு மூட்டைமூட்டையாய் அமைச்சர் எட்மண்ட் அரிசி வழங்கினார்

### அமைச்சர் சவுந்தரபாண்டியன் பேச்சு

# அரிசன மக்களுக்கு வட்டியில்லா கடனுக ரூ. 84 லட்சம்

சென்னை, ஜன-16 அரிசன மக்கள் மேம்பாடு அடைய தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் உள்ள அரசு 84 லட்சம் ரூபாயை வட்டி இல்லாத கடனுக வழங்கி இருக்கிறது. விடுதியில் உள்ள மாணவர்களுக்கு தினர்தோறும் பால் வழங்க அரசு ஏற்பாடு செய்து வருகிறது என்று அமைச்சர் பெ சவுந்தரபாண்டியன் தெரிவித்தார்

அரிசன நலத்துறைக்கென்று கடந்த 31 ஆண்டுகளாக அலுவலர்கள் ஊழியர்கள் இல்லாமல் இருக்கிறார்கள். இத்துறைக்கு ஊழியர்களை தனியாக நியமிகக வேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவரிடம் கேட்டிருக்கிறேன் என்று அமைச்சா சவுந்தரபாண்டியன் கூறினார்.

செங்கை மாவட்டம் அச்சிறுப்பாக்கத்தில் 75 மாணவர்கள் தங்குவதற்காக அரிசன நலத்துறையின் சாரபில் கட்டப்பட்ட விடுதியை கொத்சனூர் நா. கிருஷ்ணன் திறந்து வைத்தார.

இந்த விழாவில் தமிழக அரிசன நலத்துறை அமைச்சா பெ. சவுந்தரபாண்டியன் பேசுகையில் கூறியதாவது:

"புரட்சித் தலைவர் தலைமையில் இந்த அரசு உருவான பிறகு இந்தத்துறை முடுக்கிவிடப் பட்டிருக்கிறது.

நலிந்த சமுதாய மக்கள் பொருளாதார நிலையில் ஏற்றம் பெறவும், உரிய காலத்தில் உரிய உதவிகளைப் பெறவும் கண்ணும் கருத்துமாக இந்தத்துறை செயல்பட்டுவருகிறது.

## சுடுகாட்டுக்கு நில ஆர்ஜிதம்

இந்த விடுதிக்கு அளிக்கப்பட்ட 2 லட்சத்து 60 ஆயிரம் ரூபாயை மட்டுமசட்டமன்ற உறுப்பினரும் நாடாளுமன்ற உறுப்பினரும் இங்கே குறிப்பிட்டார்கள்.

இந்த விடுதியைப் போல விடுதிகள் கட்ட இந்த மாவட்டத்திற்கு 22 லட்சத்து 50 ஆயிரப் ரூபாய் ஒதுக்கப்பட்டது. அரிசனர்களுக்கு வீட்டு மனைகளை வாங்க 8 லட்சம் ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது

இந்த துறையின் மூலம் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு கோடி ரூபாய் ஒதுக்கி தாழ்த்தப்பட்ட மக்களின் மேம்பாட்டிற்காக செலவிட்டு வருகிறது

சுடுகாட்டுக்கு சவத்தை எடுத்துச் செல்லும் பாதை சரியாக இல்லை என்று எல்லா இடங்களிலும் கேட்கிறார்கள்.

இந்தப்பிரச்சினையை உடனடியாக தீர்க்கும்படி ஒவ்வொரு மாவட்ட ஆட்சித் தலைவரிடமும் கேட்டுஇருக்கிறாம் சுடுகாட்டுப் பாதைக்கு நில ஆர்ஜிதம் செய்யும்படி உத்தரவிட்டிருக்கிறோம்.

இந்த ஊரில் ஊராட்சி ஒன்றியத்தின் ஆணையாளா கடுகாட்டுப் பாதைக்கு நிலம் ஏற்பாடு செய்திருக்கிறார்.

இந்த ஆட்சி பொறுப்பேற்ற பிறகு ஏழைஎளிய மக்கள் சமுதாயத்தில் மட்டுமல்ல. பொருளாதாரத் துறையிலும் முன்னேற வேண்டும் என்பதற்காக 84 லட்சம் ரூபாயை வட்டியில்லாத கடனுக வழங்க உத்தரவிடப்பட்டுள்ளது.

புதிய தொழில்களை தொடங்கவும் அதன் மூலம் ஏற்றம் பெறவும் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

கலப்புமணம் செய்து கொள்கிறவர்களுக்கு இனிமேல் ரூ5 ஆயிரம் நிதி கொடுப்பதுடன் வேலைக்கு முன்னுரிமை கொடுக்கப்படும் இதற்கு ஆணையிட நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது.

படித்துக் கொண்டிருக்கிற இளம் உள்ளங்கள் சத்துணவுபெற்று ஆரோக்கியமாக வளர தினந்தோறும் பால் வழங்க ஆலோசிக்கப்பட்டது. ஆனல் இதற்கு அதிகம் செலாகும் என்பதால் வேறு யாராவது முன் வருகிறார்களா என்று பரிசீலிக்கப் பட்டது.

## வருமான வரிவிலக்கு

தாழ்த்தப்பட்ட விடுதியில் உள்ள மாணவர்களுக்கு தினசரிபால்வழங்க "ம்கர்" நிறுவனம் முன் வந்திருக்கிறது. இதன் மூலம் அவர்கள் பிஞ்சுப் பருவத்திலேயே ஊட்டச் சத்துணவை பெற்று எதிர் காலத்தில் சிறந்து விளங்க முடியும். அறிவு வளர்ச்சி பெற்று சமுதாயத்தில்முன்னேற முடியும்.

தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு சலுகை அளிப்பதில் உள்ள வருமான வரம்பைநீக்குவதற்கு அரசு ஆலோசித்து வருகிறது.

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சலுகைகள் அளிப்பதில் இந்த அரசு புதிய அணுகு முறையை கடைப்பிடித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரபாண்டியன் பேசினா.

விழாவில் மோகனரங்கம் எம்.பி., எத்திராஜ் எம்.எல்.ஏ., மாவட்ட ஆட்சித் தலைவர் ஓம்குமார, அரிசன வீட்டு வசதிக் கழகத் தலைவா சி. செல்லப்பன், மாவட்ட அரிசன நலத் துறைஇயக்குனா ஏ. இளங்கோவன ஆகியோா பேசினார்கள்.

## மருத்துவ மனையில் வி.கே. கலைமணி

வெள்ளக்கோயில், ஜன. 16-வெள்ளக் கோயில் தொகுதி அமைப்பாளர் வி.கே. கலைமணி உடல நலக் குறைவால் பெருந் துறை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்.

✽ அரசு ஏற்பாடு

## அம்பேத்கார் பக்தவத்சலம் படத் திறப்பு

சென்னை, ஜன. 16-தாழ்த்தப்பட்ட மக்களின் தனிப் பெருந்தலைவரும், அரசியல் சட்டத்தை உருவாக்கிய மேதைகளில் ஒருவருமான டாக்டர் அம்பேத்காரின் உருவப்படம் தமிழ்நாடு சட்டசபையில் வரும்சட்டமன்றக்கூட்டத் தொடரில் திறந்துவைக்கப் படுகிறது.

முன்னுள் முதல்வர் எம். பக்தவத்சலத்தின் உருவப் படம் ராஜாஜி மண்டபத்தில் திறந்து வைக்கப்படுகிறது.

இத் தகவல்களை செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. அறிவித்தார்.

## மேற்கு ஜெர்மன் நடன நிகழ்ச்சி

சென்னை, ஜன. 16-மேற்குஜெர்மானிய கூட்டரசு நாட்டின் ஊப்பர்டால் நடனக் குழுவினரின் நடன நிகழ்ச்சி இன்றும், நாளை (17-1-79) யும், சென்னை மியூசிக் அகடாமியில் மாலை 6-30 மணிக்கு நடக்கிறது.

நாளை (புதன்) மாலை நடக்கும் நிகழ்ச்சிக்கு அமைச்சர் கே. ஏ கே தலைமை வகித்து கலைஞர்களுக்கு பரிசு வழங்குகிறார் அமைச்சர் செ. அரங்கநாயகம் வாழ்த்துரைவழங்குகிறார்.

தமிழ்நாடு அரசின் சார்பில் இயல் இசை நாடக மன்றம் இந்த நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்துள்ளது.

## அரசு அச்சக பொது உறுப்பினர் கூட்டம்

தமிழ்நாடு அரசினர் அச்சக தொழிலாளர் சங்கத்தினைச்சேர்ந்த சங்க நிர்வாகிகளும் முன்னணி செயல் வீரர்களும அண்ணு தொழிற்சங்கப் பேரவையிடம் தொடர்புகொண்டு சங்கத்தின நிலைமைகளையும் தொழிலாளர் பிரச்சினைகளையும் விளக்கி எழுத்து மூலமாக எழுதிக்கொடுத்திருக்கிறார்கள். எனவே தொழிற்சங்க நிர்வாகிகள் அமைப்பை முறைப்படுத்திட அரசு அச்சக பொது உறுப்பினர்கள் கூட்டம் இம் மாதம் 18-ந் தேதி (வியாழக்கிழமை) மாலை 5-30 மணிக்கு அண்ணு தொழிற்சங்கப் பேரவை பொருளாளர் கே. ராஜேந்திரன் தலைமையில் துறைமுகப் பகுதி அமைப்பாளர் ஏ. வி. கிருஷ்ணமூர்த்திமுன்னிலையில்நடைபெறும்.

வை. பெருமாள்

பொதுச்செயலாளர்,

அண்ணு தொழிற்சங்கப் பேரவை



## தமிழ்நாடு அரசு

### பொதுப்பணித்துறை

### பெரியாறு மேம்பாடு வட்டம் எண் 3, மதுரை

# ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பு

எண் 424|க 1-கோ 14|79. நாள் 5-1-79

## ஒப்பந்தப்படிவம் - எல். எஸ்.

தமிழ்நாடு ஆளுநருக்காகவும், அவா சார்பிலும, கீழ்க்கண்ட வேலைகளுக்கு மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளிகள், அடியிற் கையொப்பமிடப்பட்டவரால் 23-2-79 அன்று மாலை (அலுவலகக் கடிகாரப்படி) 3-00 மணி வரை வரவேற்கப்படுகிறது. ஒப்பந்தப்புள்ளிகள் அன்றே மாலை 3-30 மணி அளவில் திறக்கப்படும்.

| வரிசை எண் | வேலையின் பெயர் | ஒப்பந்தக் காரரின் வகுப்பு | ஒப்பந்தக் காலம் | முன் வைப்புத் தொகை | ஒப்பந்த நமூனாவின் விலை, விற்பனை வரி, சார்ஜ் உட்பட (திருப்பித் தரப்படமாட்டாது) | முன்வைப்புத் தொகை செலுத்த வேண்டிய செயற்பொறியாளர் அலுவலகம், | ஒப்பந்த நமூனாவின் விலை செலுத்தப் படவேண்டிய செயற்பொறியாளர் அலுவலகம் |
|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| 1. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாயின் 2-வது கிளை வாய்க்காலின் கீழ்கண்ட பகுதியில் அடித்தளத்தையும் பக்கங்களையும், சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண் 1 முதல் 6 வரை 0.0 மீ முதல் 1209 மீ வரை | வகுப்பு 3 ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 4800- (ரூபாய் நான்கு ஆயிரத்து எட்டு நூறு மட்டும்) | ரூ. 25- மற்றும்ரூ. 1.05 (விற்பனை வரி சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் (பொ. ப. து.) பெரியாறு மேம்பாட்டுக்கோட்டம் எண் 10, மதுரை-2. | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டு கோட்டம் எண். 10, மதுரை-2. |
| 2. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாயின் 2-வது கிளைவாய்க்காலின் கீழ்கண்ட பகுதியின் அடித்தளத்தையும் பக்கங்களையும், சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண். 7 முதல் 12 வரை 1809 மீ. முதல் 3811 மீ. வரை. | வகுப்பு 2 ம் அதற்கு மேலும். | 5 மாதங்கள். | ரூ. 5300- (ரூபாய் ஐந்து ஆயிரத்து முன்னூறு மட்டும்) | ரூ. 25 மற்றும் ரூ. 1. 05 (விற்பனை வரி (சர்சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக் கோட்டம் எண். 10, மதுரை | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக் கோட்டம் எண். 10, மதுரை. |
| 3 | தற்போதுள்ள பெரியாறு பிரதானகால்வாயின் 12-வது கிளை வாய்க்காலின் கீழ்கண்ட பகுதியில் அடிகளத்தையும், பக்கங்களையும் சிமிண்ட்கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண். 11. 9513 மீ. முதல் 9783மீ. வரை. | வகுப்பு 3ம் அதற்கு மேலும் | 5மாதங்கள் | ரூ. 3300- (ரூபாய் மூன்று ஆயிரத்து முன்னூறு மட்டும்) | ரூ. 25- மற்றும் 1.05 (விற்பனை வரி சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் (பொ. ப.து) பெரியாறு மேம் பாட்டுக் கோட்டம் எண். 3 மேலூர். | செயற்பொறியாளர் பொ. ப.து. பெரியாறு மேம் பாட்டுக் கோட்டம், எண், 11 மதுரை |
| 4 | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாய்ன் கீழ்கண்ட 12-வது கிளை வாய்க்காலின் கீழ்க்கண்ட பகுதியின் அடித்தளத்தையும், பக்கங்களையும், சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண் 11 'ஏ' 9783 மீ. முதல் 10126 மீ வரை. | வகுப்பு 3-ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 4300- (ரூபாய் நான்கு ஆயிரத்து முன்னூறு மட்டும்) | ரூ. 25-மற்றும் 1.05, (விற்பனை வரி சர்சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டுக்கோட்டம் எண்-8 மேலூர். | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டுக்கோட்டம் எண். 11 மதுரை. |
| 5 | தற்போதுள்ள பெரியாறு பிரதானகால்வாயின் 9வதுகிளை வாய்க்காலின் கீழ்க்கண்ட பகுதியின் அடித்தளத்தையும் பக்கங்களையும் சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண்-5 980 மீ. முதல் 1740மீ. வரை | வகுப்பு 3ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 4200- (ரூபாய் நான்கு ஆயிரத்து இரண்டு நூறு மட்டும) | ரூ. 25 மற்றும் ரூ. 1-05 (விற்பனைவரி சர்சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டு கோட்டம் எண்-8. மேலூர் | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டுக் கோட்டம் எண் - 19. மதுரை. |
| 6. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாயின் 11 வது கிளை வாய்க்காலின் கீழ்க்கண்ட பகுதியின் அடித்தளத்தையும், பக்கங்களையும் சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல் பகுதி எண். 8. 4977 மீ. முதல் 5617 மீ. வரை | வகுப்பு 3 ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 3100- (ரூபாய் மூன்று ஆயிரத்து நூறு மட்டும) | ரூ. 25- மற்றும் 1.05 (விற்பனை வரி, சர்சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டுக்கோட்டம் எண், 8 மேலூர். | செயற்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டுக்கோட்டம் எண். 11, மதுரை. |

இந்த ஒப்பந்த விவரம் சம்பந்தப்பட்ட மற்ற முழுவிவரங்கள் மேற்கண்ட பகுதி எண், 6-ல் குறிப்பிட்டுள்ளபடி தொகையைக் கட்டி வாங்க வேண்டிய நமூனாக்களின் (டெண்டர் ஷெட்டியூலில்) உள்ளன.

மேற்கண்ட ஒப்பந்தப்புள்ளிவிபர அட்டவணைக்குரிய விலையை அரசாங்க கருவூலங்களிலோ அல்லது "ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா"விலோ ஒவ்வொரு வேலைக்கும், அதன் நேர் பகுதி எண் 8-ல் குறிப்பிட்டுள்ள சம்பந்தப்பட்ட செயற்பொறியாளர் கணக்கில் "882 P. W. Other remittance", மேலும் விற்பனை வரி "040- Sales Tax - B receipt Under State Sales tax other receipt" என்ற கணக்கு தலைப்புகளிலும் தனித்தனியாகவோ அல்லது பகுதி எண் 8-ல் குறிப்பிட்டுள்ள செயற் பொறியாளர் அலுவலகங்களில் பணமாகவோ செலுத்தலாம்.

12-2-79 முதல் 20-2-79 முடிய ஒப்பந்தப்புள்ளி நமூனாக்கள் இவ்வலுவலகத்தின் அலுவலக நேரங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

ஜே. என். தாசன்,

கண்காணிப்புப்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம்பாடு வட்டம் எண், 3

மதுரை-625002.




தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகப், கச்சேரி சாலை சென்னை 600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி